13th February 1959]

available with the Hon. Minister, may I know, so far as the South Arcot district is concerned, whether any exhibition has been held in that district?

THE HON. SRI R. VENKATARAMAN : The scheme is to hold a small exhibition for three districts in each year. Even day before yesterday, I went to the exhibition held for three districts—Madras, North Arcot and Chingleput. Similar exhibitions are arranged in groups of three districts.

SRI A. GOVINDASAMY : இந்த கைத்தறி போர்டில் யார் யார் அங்கம் வகிக்கிறார்கள் ? நிர்வாகப் பொறுப்பு யார் கையில் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : The District Collector, local Deputy Registrar of Co-operative Societies, one representative of the primary weavers co-operative societies, two representatives of handloom weavers, one representative of master weavers, one representative of yarn dealers and one representative of handloom cloth dealers. Local members vary from district to district.

*Recruitment of persons belonging to the Scheduled castes to the Police force*

*302 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஷெட்யூல் வகுப்பினர்கள் 5 அடி 3 அங்குல உயரமிருப்பினும் அவர்களைப் போலீஸ் சேவைக்கு சேர்த்துக் கொள்ளும்படியாக மத்திய சர்க்காரிடமிருந்து நம் ராஜ்ய சர்க்காருக்கு ஏதேனும் உத்தரவுகள் அனுப்பப்பட்டிருக்கின்றனவா ?

(ஆ) அவ்வாறு உத்தரவுகள் அனுப்பப்பட்டிருப்பின் இவ்வுத்தரவுகள் பிரகாரம் 1958-ம் வருஷத்திலே எத்தனை பேர்கள் தெரிந்தெடுக்கப்பட்டார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No Sir.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட மத்திய சர்க்காரின் உத்தரவு ஒரிஸ்ஸா, பம்பாய், மைசூர் ஆகிய ராஜ்யங்களுக்கு அனுப்பப்படுவதன் பேரில் அந்த உத்திரவுக்கு இணங்க 5′ 3″ உயரத்தில் இருப்பவர்களை போலீஸ் தேர்ந்தெடுத்து இருப்பதாக தெரிகிறது. ஆகவே நமது சர்க்கார் மத்திய சர்க்காரின் உத்தரவுப்படி 5′ 3″ உள்ள ஹரிஜனங்களை யாவது போலீஸில் சேர்த்துக்கொள்வதுபற்றி ஆலோசனை செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு திட்டம் மத்திய சர்க்கார் உத்திரவுப்படி இல்லை என்று சொன்னார்கள். மத்திய அரசாங்கத்தில் ஹோம் மினிஸ்ட்ரி கன்சல்டேஷன் கமிட்டியில் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் இந்த யோசனையைக் கூறினார்கள். இந்த யோசனை ராஜ்ய அரசாங்கத்தின் அபிப்பிராயத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அடுத்த ராஜ்யங்களில் எப்படிச் செய்கிறார்கள் என்ற தகவல் என்னிடம் இல்லை. இந்த அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் நிபந்தனை இருக்கிறது. ஆகவே ஒரு குறிப்பிட்ட சமூகத்தினருக்கு இந்த நிபந்தனையை எடுத்து விடுவது நல்லதல்ல. இந்த சமூகத்திலேயே இந்த உயரம் உள்ளவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். அதனால் இந்த யோசனையை அரசாங்கம் ஏற்றுகொள்ளவில்லை.